POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் பற்றி புகார்:

Regd. No. TN - MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 11-3-1986 செவ்வாய் -:- வெளியூர் 12-3-1986 புதன் [இதழ் 140

# மக்வானாவுக்கு நோட்டீஸ்

## நாடாளுமன்றத்தில் கழக எம். பி. க்கள் விவாதம்

புதுடெல்லி, மார்ச் 11- முதல்வர் புரட்சித் தலைவர் பற்றி நாடாளுமன்றத்தில் அவதூறு கூறிய மத்திய அமைச்சர் மக்வானாவுக்கு நாடாளுமன்ற சபாநாயகர் நோட்டீஸ் அனுப்ப ஆணை பிறப்பித்தார்.

சென்னை மற்றும் பகுதிகளில் வெள்ளம் ஏற்படும் முன் முதல்வர் புரட்சித் தலைவருடன் தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயன்றதாகவும் ஆனால் முதல்வர் தூங்குவதாக பதில் வந்ததாகவும் மத்திய அமைச்சர் மக்வானா நாடாளுமன்றத்தில் கூறி இருந்தார்.

அதுபற்றி நாடாளுமன்றத்தில் இன்று கழக அணித் தலைவர் குழந்தைவேலு மற்றும் கழக உறுப்பினர்கள் ஆகியோர் பிரச்சினை கிளப்பினார்கள்.

குழந்தைவேலு பேசுகையில் கூறியதாவது:-

முதல்வர் புரட்சித் தலைவர் பற்றி மக்வானா கூறி இருப்பது தவறான செய்தியாகும். முதலமைச்சர் இல்லத்தில் அக்டோபர் 23முதல் ஜனவரி 7ந்தேதி வரைதொலைபேசித் தொடர்பு கிடையாது.

ஆனால் வெள்ளம் வந்தது நவம்பர் மாதம். எனவே வெள்ளம் வருமுன் முதல்வருடன் பேச முயன்றதாகவும் முதல்வர் தூங்குவதாக பதில் வந்ததாகவும் மத்திய அமைச்சர் மக்வானா பேசியிருப்பது தவறானது.

தொலைபேசித் தொடர்பே இல்லாதபோது தொலைபேசியில் பேசியதாகக் கூறியது சரியானதல்ல.

எனவே மத்திய அமைச்சர் மக்வானா தான் கூறியதை வாபஸ் பெறவேண்டும், அல்லது அவர் சொன்னதை உரிமைப் பிரச்சினையாகக் கருதி உரிமைக்குழுவுக்கு விட வேண்டும்.

இவ்வாறு குழந்தைவேலு கூறினார்.

கழக உறுப்பினர்கள், அண்ணாநம்பி. ஜனார்த்தனம ஆகியோரும் மக்வானாவினபேச்சை ஆட்சேபிததனர்.

### சபாநாயகர் பதில்

இதுபற்றி மத்தியஅமைச்சர் மக்வானாவுக்கு நோட்டீஸ் அனுப்ப சபாநாயகர் பல்ராம் ஜாக்கர் உத்தரவு பிறப்பித்தார்.

மக்வானாவிடமிருந்து பதில் வந்ததும் இப்பிரசசினையில் முடிவு எடுக்கலாம் என்றும் சபாநாயகா அறிவித்தார்.



### காளிமுத்து கண்டனம்

மக்கள் சபையில் மக்வானா கூறிய புகார் தவறானது என அமைச்சர் காளிமுத்து தெரிவித்துள்ளார்.

அமைச்சர் காளிமுத்து வெளியிட்டுள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது :-

தமிழகம் புயலின் தாக்குதலுக்கு உட்பட்ட போது- நிவாரணப் பணிகள் அனைத்தையும்- புரட்சித்தலைவரே தொடர்புடைய அமைச்சர்கள், அலுவலர்கள் அனைவரையும் கலந்து பேசி ஆவன செய்தார் என்பது நாடறிந்த உண்மை! மைய அரசின் நிதிக்காகக் காத்திராமல், தமிழக அரசே தனது நிதியை முதல் கட்டமாக ஒதுக்கீடு செய்து - பணிகளை முடுக்கிவிடக் கட்டளையிட்டவரும் புரட்சித் தலைவர் தான்!

புயலும் வெள்ளமும் தாக்கிய மக்கள் நிறைவடையவும், நிம்மதி பெறவும் உரிய அளவு உதவிகளைத் தமிழக அரசு நிறைவேற்றியிருக்கிறது. இதற்காக மைய அரசு தந்த நிதி மிகமிகப் பற்றாக் குறையானது என்றாலும், தமிழக அரசு புரட்சித் தலைவர் ஆணைப்படி அனைத்துப் பணிகளையும்குறைவின்றிச்செய்து முடித்திருக்கிறது. பேசுபவர் எவராயினும் பிரச்சினையின் முக்கியம் கருதி-நள்ளிரவு நேரமானாலும் தொலைபேசியில் அதைக் கேட்டறிந்து உடனடிப் பரிகாரம் காண்பவர் புரட்சித்தலைவர் என்பதை அவரை அறிந்த அனைவரும் அறிவார்கள்.

புயல் தாக்கியபோது, புரட்சித்தலைவரைத் தொடர்பு கொள்ள முயன்றதாகவும் அவர் தூக்கத்திலிருப்பதாகச் சொன்னதாகவும்- பாராளு மன்றத்தில் மந்திரி மக்வானா- தெரிவித்திருப்பது வேண்டுமென்றே களங்கம் சுமத்த நினைக்கிற வகையில் உருவாக்கும் கற்பனைக் குற்றச் சாட்டு!

ஒரு வேளை- மக்வானா ஏதோ மயக்கத்தில் எங்கோ பேசிவிட்டு - உண்மை உணராமல் தகவல் தந்திருக்கக் கூடும்! மத்திய அமைச்சர்கள் இப்படி வேண்டுமென்றே பொய்மை கூறுவது அவர்கள் பொறுப்புக்கு அழகாகாது.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து தனது அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

## புரட்சித்தவைர் தலைமையில் அமைச்சவைக் கூட்டம்

சென்னை, மார்ச் 11— தமிழக அமைச்சரவைக் கூட்டம் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் தலைமைச் செயலகத்தில் இன்று நடந்தது,

அமைச்சர்களும், அரசு தலைமைச் செயலாளர் டி வி அந்தோணியும் இதில் கலந்து கொண்டனர்.

தமிழக அரசின் பட்ஜெட்டிற்கு இறுதி வடிவம் கொடுக்க இந்த கூட்டம் நடைபெற்றது என்று நிதிஅமைச்சா டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

## பெசன்ட்நகர் வெடிகுண்டு: தனிபோலீஸ் படை அமைப்பு

சென்னை, மார்ச் 11— சென்னை பெசன்ட் நகரில் ஒரு கடையில் வெடிகுண்டு வெடித்தது பற்றி போலீசார் விசாரித்து வருகின்றனர்.ராஜா என்பவா இப்போது நடத்திவரும் கடையை அச்சன்பாபு என்பவரிடமிருந்து வாங்கினாராம். ஒரு வாரத்திற்கு முன்பு மீண்டும் அச்சன்பாபு வந்து கடையை தனக்குதத்ரும்படி கேட்டாராம்.

ராஜாகடையைத் தர மறுத்துவிட்டார். அச்சன் பாபு வெடிகுண்டு வைத்திருக்கலாமோ என சந்தேகம் எழுந்துள்ளது.

வெடிகுண்டு வைத்த நபரை போலீசார் தேடி வருகிறார்கள்.

இது சம்பந்தமாக தனி போலீஸ்படை அமைக்கப் பட்டுள்ளது.

## நெல்லை விழா: மாணவர்கள் பயணம்

சென்னை, மார்ச் 11— திருநெல்வேலியில் வரும் 14ந் தேதி நடைபெறும் கழக வெற்றி விழாவில் ஆயிரக்கணக்கான மாணவ அணித்தோழர்கள் கலந்து கொள்ளுவார்கள் என்று மாணவர் பிரிவுசெயலாளர் லியாகத்அலிகான் தெரிவித்தார்.

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் மாணவர் அணியினர் வருகிறார்கள். சென்னையிலிருந்து 13ந் தேதி நான் மாணவர் அணியினருடன் நெல்லை புறப்படுகிறேன் என்று லியாகத் அலிகான் கூறியுள்ளார்.

நெல்லைக் கூட்டத்தில் ஏராளமான தொழிலாளர்கள் கலந்து கொளள வருகின்றனர் என்று பேரவை செயலாளர் வை. பெருமாள் தெரிவித்துள்ளார்.



திருநெல்வேலியில் முதல்வர் புரட்சித்தலைவர் பங்கேற்க உள்ள விழா மேடையின் எழில்மிகு தோற்றம்.

## தலைமைக் கழக அறிவிப்பு

### நெல்லையில் புரட்சித்தலைவர்

### உள்ளாட்சித்தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் வெற்றிபெற்ற நகராட்சி, ஒன்றியம், பேரூராட்சி, தலைவர்களுக்கு

### முக்கிய அறிவிப்பு

14-3-86 வெள்ளிக்கிழமையன்று திருநெல்வேலியில் நடைபெற உள்ள பாராட்டு விழாவில்அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்ற நகராட்சித் தலைவர்கள், ஒன்றியப் பெருந்தலைவர்கள், பேரூராட்சித் தலைவர்கள் ஆகியோருக்கு இதயதெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர்

**புரட்சித்தலைவர்**

அவர்கள் பொன்னாடை போர்த்தி பாராட்டவிருப்பதால் கழகத்தின் சார்பாக வெற்றி பெற்ற தோழர்களும், சுயேச்சையாக வெற்றி பெற்று கழகத்தில் இணைந்த நகராட்சி - ஒன்றிய - பேரூராட்சித் தலைவர்களும் தவறாமல் விழாவில் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

விழாவில் கலந்து கொள்ள நெல்லைக்குவருகைதரும் நகராட்சி ஒன்றிய - பேரூராட்சித் தலைவர்கள் நெல்லை மாவட்டக் கழகச் செயலாளர் திருமிகு கருப்பசாமி பாண்டியன் அவர்களை நெல்லை சந்திப்புக்கு எதிரே உள்ள மாவட்ட கழக அலுவலகத்தில் முன்னதாகவே தொடர்பு கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்.

**எஸ். இராகவானந்தம்**

சென்னை-14
11-3-86

பொதுச் செயலாளர்
அண்ணா தி. மு கழகம்

## நெல்லை விழாவிற்கு தனி பஸ்களில் கழக தோழர்கள் பயணம்

சேலம், மார்ச். 11— திருநெல்வேலியில் நடைபெறும் கழக வெற்றி விழாவில் கலந்து கொள்ள பல்வேறு மாவட்டங்களிலிருந்து கழகத் தோழர்கள் தனி பஸ்களில் செல்கிறார்கள்.

கழக வெற்றி விழா நெல்லையில் வரும் 14-ந் தேதி நடைபெறுகிறது அல்லவா? விழாவில் புரட்சித் தலைவர் கலந்து கொண்டு உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்ற கழகத் தோழர்களுக்கு பொன்னாடை போர்த்தி கவுரவிப்பார்.

விழாவில்கலந்துகொள்ள தமிழகத்தின்பல்வேறுபகுதிகளிலிருந்தும் கழகத் தோழர்கள்செல்கிறார்கள்.

சேலம் மாவட்டத்தில் வெற்றி பெற்ற ஊராட்சி ஒன்றியத் தலைவர்கள் ஊராட்சி மன்றத் தலைவர்கள் மற்றும் கழகத்தவர்கள் (தெற்கு) சேலம் மாவட்ட செயலாளர் கே,பி. செல்வராசு தலைமையில் நெல்லைக்கு செலகின்றனர்.

20 பஸ், 25 கார், 100 வேன்களில் மாவட்டம் முழுவதிலும் இருந்துசெல்கினறனர்.

மற்றும் கெங்கவல்லி, மோகனூர் ராசிபுரம்ஒன்றியத்தைச்சேர்ந்த தோழர்கள், சைக்கிள்களிலும் ஜோதியுடனும் தொடர் ஓட்டமாக செல்கின்றனர்.

### கலைக்குழு

சென்னை துறைமுகப் பகுதி இளைஞர் அணித் தலைவர் கே. காஜா தலைமையில், 20 பேர் கொண்ட கலைக்குழுவினர் நெல்லை கழக வெற்றி விழாவில் கலைநிகழ்ச்சிகள் நடத்துவதற்காக நாளைய தினம் சென்னையிலிருந்து புறப்படுகின்றனர்.

## கி. ஆ. பெ. மருத்துவமனையில் அனுமதி

சென்னை, மார்ச் 11— முத்தமிழ் காவலர் கி.ஆ. பெ. விசுவநாதம் உடல் நலக்குறைவு காரணமாக சென்னை பொது மருத்துவமனையில்அனுமதிக்கப் பட்டுள்ளார்.

இப்போது அவரது உடல் நிலை தேறி வருகிறது. முத்தமிழ்காவலரை அமைச்சர் அருணாசலம் சந்தித்து நலம் விசாரித்தார்.

## நெல்லை விழாவில் புரட்சித்தலைவருக்கு வெள்ளிக்கேடயம்

திருநெல்வேலி, மார்ச் 11— நெல்லை நகரசபை தலைவர் ஆதம் மற்றும் உறுப்பினர்கள் சேர்ந்து முதல்வர் புரட்சித் தலைவருக்கு வெள்ளிக் கேடயம் வழங்குகின்றனர்.

நெல்லை மாநகரில் வரும் 14ந் தேதியன்று உள்ளாட்சித் தேர்தலில் வெற்றிபெற்ற வீரர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பாராட்டு வழங்குகிறார்.

நெல்லை நகரில் உள்ள சாப்டர் மேல் நிலைப்பள்ளித் திடலில் பிரம்மாண்டமான கூட்டம் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் கழகத்தின் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்ற நகர சபைத்தலைவர்கள். ஊராட்சி ஒன்றியத் தலைவர்கள், பேரூராட்சித் தலைவர்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் பாராட்டு வழங்குகிறார்.

இக்கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவருக்கு நெல்லை மாவட்டக் கழக செயலாளர் கருப்பசாமி பாண்டியன் தங்கவாள் வழங்குகிறார்.

மறுநாள் 15—ந் தேதி காலை 10மணிக்குநெல்லை நகரசபையில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப் படுகிறது. இந்த வரவேற்பு விழாவில். நெல்லை நகரசபை தலைவர் ஆதம் மற்றும் உறுப்பினர்கள்சார்பாகமுதல்வர் புரட்சித் தலைவருக்கு வெள்ளிக்கேடயம் வழங்க இருக்கின்றனர் 2 கிலோ எடையுள்ள வெள்ளியில் இந்தகேடயம் செய்யப்படுகிறது.

## முதல்வர் புரட்சித்தலைவர் முன் கழகத்தில் இணைந்த மூன்று பேரூராட்சி தலைவர்கள்

சென்னை. மார்ச் 11— 3 பேரூராட்சித் தலைவர்கள் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

உள்ளாட்சித் தேர்தலில் வெற்றிபெற்ற பலா ஏற்கெனவே கழகத்தில் சேர்ந்துள்ளனர்.

கன்னியாகுமரிமாவட்டம் திருவட்டாறு பேரூராட்சித் தலைவர் டி. கமலன், சங்கரன்குடி பேரூராட்சித் தலைவர் ஏசுநேசமணி. ஐந்து கிராமம் பேரூராட்சித் தலைவர் சுயம்புலிங்கம் ஆகியோர் முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்து கழகத்தில் இணைந்தனர், அந்தமூவரும் சுயேச்சைகளாக வெற்றி பெற்றவர்கள்.

அப்போது ராஜரத்தினம் எம்.எல் ஏ. மற்றும்தோழர்கள் உடன் இருநதனர்.

### ஊராட்சி மன்றத் தலைவர்கள்

மதுரை மாவட்டம் கீழ் நாச்சிகுளம் ஊராட்சி மன்றத்தலைவர் எம்.வடிவேலு பிள்ளை, திருவேடகம் ஊராட்சி மன்றத தலைவர் கா. ஆதிமூலம் சேர்வை மற்றும் சின்னய்யா, கதிரேசன், சுப்ரமணியம் ஆகிய உறுப்பினர்கள் முதல்வர் புரட்சித் தலைவர் முன்னிலையில் இன்று கழக உறுப்பினர்களாகச் சேர்ந்தனர்.

அப்போது அமைச்சர்கள் காளிமுத்து, முத்துசாமி, விலை பொருள் விற்பனை வாரியத் தலைவர் மதுரை பாண்டியன், எம்.ஜி.ஆர். மன்றத் தலைவர் மதுரை டி.எம். துரை ஆகியோர் உடன் இருந்தனர்.

### நெருக்கடி

உலகியல் வாழ்வில் நெருக்கடிகள் சகஜம். அவற்றைச் சந்தித்து வெற்றி கொள்வதே ஆண்மை.

— பேரறிஞர் அண்ணா

### உதவி

ஒருவர்க்கொருவர் உதவி செய்து கொள்ளாமல் வாழமுடியாது எனினும் மற்றவர் உதவியையே எதிர்பார்த்து வாழ்வது சரியல்ல.

— தந்தை பெரியார்

# தமிழ் போராளிகளை ஒழித்துக்கட்ட சிங்கள ராணுவம் திட்டம்

## இலங்கை மந்திரி கொக்கரிப்பு

லண்டன், மார்ச் 11— இலங்கையில் தமிழர் விடுதலை போராளிகளைபூண்டோடுஒழித்து கட்ட சிங்கள ராணுவம் திட்டமிட்டிருக்கிறது என்று இலங்கை பாதுகாப்புஅமைச்சர் அதுலத் முதலி கூறியிருக்கிறார். இலங்கையில் தமிழர்களை சிங்கள ராணுவம் வேட்டையாடிக் கொன்று வருகிறது. போர் நிறுத்த ஒப்பந்தத்தைப் புறக்கணித்துவிட்டு இலங்கை தமிழர் பகுதிகளில் வீடுகளுக்கு தீ வைத்துக் கொளுத்தி வருகிறது. அப்பாவித் தமிழர்களை துப்பாக்கியால் சுட்டுக் கொல்லுகிறார்கள்.

இலங்கை அரசின் பயங்கர திட்டம் பற்றி லண்டனில் உள்ள பி. பி. சி. வானொலி நிலையம் தெரிவித்தது.

தமிழ்ப் போராளிகளை அறவே ஒழித்துக்கட்ட சிங்கள ராணுவம பயங்கரத் திட்டம் ஒன்றை தீட்டியிருப்பதாக இலங்கை பாதுகாப்பு அமைச்சர் அதுலத்முதலி கூறியதாகவும் அந்த ரேடியோ தெரிவித்தது.

### வெளிநாட்டு ஆயுதங்கள்

யாழ்ப்பாணம் பகுதியில் சிங்கள ராணுவத்தினர் விரைவில் தமிழ்ப்போராளிகளை ஒழித்துக்கட்டுவார்கள் என்று அதுலத்முதலி கூறினார். ஒரு நிகழ்ச்சியில் கலந்துகொண்ட அதுலத் முதலி இதைக் கூறியதாக கொழும்புவில் உள்ள பி.பி.சி. ரேடியோ விசேஷ நிருபர் ஊர்ஜிதம் செய்தார்.

விமானங்களைத் தாக்கி சேதப்படுத்தும் ராக்கெட்டுகள் மற்றும் பயங்கர வெடிகுண்டு, ஆயுதங்களைவெளிநாடுகளில் இருந்து இலங்கை ராணுவம் வாங்கிக் குவித்துள்ளதாக அதுலத் முதலி கூறினார்.

கொழும்புவில் நடைபெறும் வர்த்தக பொருட்காட்சி நிகழ்ச்சியில் பேசிய அதுலத்முதலி தமிழர்களையும்'தமிழ்ப் பேராளிகளையும் ஒழித்துக் கட்டுவோம என்று பேசினார்.

### அதிவேக ராக்கெட்கள்

அதிவேக ராக்கெட்டுகள் தங்களிடம் ஏராளமாக இருப்பதாவும் அவர் கூறினார்.

அதுலத்முதலியின் இந்த திமிர் பிடித்த பேச்சுக்கு இலங்கை தமிழர் விடுதலை இயக்கம் கடும் கண்டனம் தெரிவித்துள்ளது.

திரிகோணமலை மாவட்டத்தில் மோநாவேவா என்ற இடத்தில் தமிழர்கள் மீது தாக்குதல் நடத்திய இலங்கை ராணுவத்தினர் மீது நேற்றுதமிழ்போராளிகள் குண்டு வீசித்தாக்கினார்கள். இதில் 10 பேர் கொல்லப்பட்டனர். 4 பேர் படுகாயம் அடைந்தனர் என்றும்ஏஜன்சிசெய்தி ஒன்று கூறியது.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India AnnaD.M.K.Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 29.

# கேரள முதல்வர் கருணாகரனுக்கு ஐகோர்ட் நோட்டீஸ்

திருவனந்தபுரம்,மார்ச் 11— கேரள மந்திரி சபைக்கு மேலும் ஆபத்து ஏற்பட்டுள்ளது. எரிசாராயம் பற்றிய வழக்கு ஒன்றில் ஒரு வாரத்தில் பதில் அனுப்புமாறு முதல்அமைச்சர் கருணாகரன் உள்பட 5 பேருக்கு உயர் நீதிமன்றம் நோட்டீஸ் அனுப்பியுள்ளது.

கேரள மந்திரிசபை எந்த நேரத்திலும் கவிழ்ந்துவிடும் என்று அண்மையில் சில பத்திரிகைகளில்செய்தி வெளியானது தெரிந்ததே. சட்டசபையைக் கலைத்துவிட்டு மீண்டும் தேர்தல் வரும் என்றும் கூறப்பட்டது.

ஆனால் இந்திரா காங்கிரஸ் மேலிடம் இதற்கு ஒப்புதல் அளிக்கவில்லை என்றும் பட்ஜெட் கூட்டம் நடந்து முடிந்த பின்னர் அதுபற்றி ஆலோசிக்கலாம் என்றும் டெல்லிகாங்கிரஸ் வட்டாரங்கள் கருத்துதெரிவித்திருந்தன என்றும்கூறப்பட்டது.

### கருத்து வேற்றுமை

இந்த நிலையில் இந்திரா காங்கிரஸ் தலைமையிலான கூட்டு மந்திரிசபைக்குமேன் மேலும் ஆபத்து ஏற்பட்ட வண்ணம் இருக்கிறது. கருணாகரன் தலைமையில் உள்ள ஐக்கிய முன்னணி மந்திரி சபையில் கருத்து வேற்றுமை நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

அமைச்சரவையில் ஏற்பட்ட சில சிக்கல்கள் தீர்க்கப்பட்டு ஒரு சுமுகமான சூழ்நிலை ஏற்பட்டு சுமார் ஒரு வாரம் கூட ஆகவில்லை.

இதற்குள் மீண்டும் மந்திரி சபைக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது.

எரிசாராயம பற்றி தனியார் ஒருவர் கேரள உயர் நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்துள்ளார். கேரள அரசின் மீது அவர் அந்த வழக்கில் சரமாரியாகக்குற்றங்கள்சுமத்தியுள்ளார்.

இந்த வழக்கு சம்பந்தமாக கேரள அரசுக்கு உயர் நீதிமன்ற நீதிபதி கே.எஸ். பரிபூரணம் நோட்டீஸ் அனுப்பியுள்ளார்.

### அமைச்சரவைக்கு ஆபத்து

முதல் அமைச்சர்கருணாகரன் மற்றும் 5 பேருக்கு நோட்டீஸ் அனுப்பப்பட்டுள்ளது. ஒரு வாரத்தில் நோட்டீசுக்கு பதில் அனுப்புமாறு நீதிபதி தாக்கீது அனுப்பியுள்ளார். இந்த வழக்கின் தீர்ப்பு எப்படி இருக்கும்என்பதைக் கேரள அரசு எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறது.

ராஜ்யசபைத்தேர்தலுக்கு இந்திரா காங்கிரஸ் சார்பில் எம்.டி.பத்மா வேட்பாளராக தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். இப்போது இந்த தேர்வும் புறக்கணிக்கப்பட்டுவிட்டது. பத்மாவுக்குப் பதிலாக டி.கே.சி. வடுதாலா என்பவர் மாநிலங்களவை உறுப்பினராக நியமனம் செய்யப்பட்டுள்ளார்.

இதற்கு இந்திரா காங்கிரஸ் மேலிடம் ஆதரவு தெரிவித்துள்ளது.

ஆக கேரள இந்திரா காங்கிரசுக்கு டெல்லி காங்கிரஸ் வட்டாரம் போதிய ஆதரவு கொடுக்கவில்லை என்றே கருத இடம் இருக்கிறது.

இந்த நிலையில் கருணாகரன் தலைமையிலான மந்திரி சபைக்கு மேலும் ஆபத்து ஏற்பட்ட வண்ணம் இருக்கிறது.

# குடிசை மாற்று வாரிய பயிற்சி திட்டம்

சென்னை, மார்ச் 11— தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்றுவாரியத்தின் வேலை வாய்ப்பு பயிற்சித் திட்டத்தின் கீழ் குஜராத்தி மருத்துவமனையுடன்இணைந்து நடத்தப்படும் செவிலியர் உதவியாளர் மற்றும் இருப்பறை உதவியாளர் ஆகியோருக்கு பயிற்சி அளிக்கப்பட்டு வந்தது.

பயிற்சி முடிந்து வெளிச்செல்லும் மாணவிகளுக்கு சான்றிதழ் வழங்கும் விழா குஜராத்தி மருத்துவமனை நிர்வாகத்தின் தலைவர் பி. கே. ஜே. பி. தலைமையில் நடைபெற்றது. இவ்விழாவில் குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என் செல்வம் கலந்து கொண்டு பயிற்சி முடிந்த 204 மாணவிகளுக்கு சான்றிதழ்களை வழங்கினார்.

இப்பயிற்சி முடித்த மாணவிகளுக்கு வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தி தரவேண்டிய உதவிகளை செய்தவதாகவும்,இது போன்ற பயிற்சிகள் இந்நிறுவனத்தில் தொடர்ந்து நடைபெற குடிசை மாற்று வாரியம தேவையான உதவிகளை செய்யும் என்றும் வாரியத் தலைவர் என் வி என்.செல்வம் தெரிவித்தார்.

# நெய்வேலி 2-வது அனல் மின் நிலையம் ஏப்ரலில் இயங்கும்

சென்னை, மார்ச் 11- நெய்வேலிஇரண்டாவது அனல்மின் நிலையத்தின் முதல் யூனிட் ஏப்ரல் முதல்வாரத்தில் இயங்கும்.

நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனின் தலைவர் எம். பி. நாராயணன் நிருபர்களிடம் கூறியதாவது:-

நெய்வேலி அனல் மின் நிலையத்தின் முதல் யூனிட் 600 மெகாவாட் மின் திறன் கொண்டது. 50 மெகாவாட் யூனிட்டுகள் ஐந்தையும்100 மெகாவாட் யூனிட்டுகள் மூன்றையும் கொண்டு அமைந்துள்ளது.

என்.எல்.சிக்கு பொருட்களை சப்ளை செய்வோர் கூட்டத்தில் நாராயணன் பேசியபோது தற்போது 100 கோடி ரூபாயாக உள்ள என்.எல்.சி.யின் வாங்குந்திறன் ஆண்டிற்கு 600 கோடி ரூபாயாக உயரும்,

அனல்மின் நிலையமும், நிலக்கரி சுரங்கமும் ஆறாயிரம் கோடி ரூபாய் செலவில் விஸ்தரிக்கப்படும்.

இரண்டாவது அனல்மின் நிலையத்தின் முதல் யூனிட் இன்னும் பத்து நாட்களில் தயாராகி விடும். ஏப்ரல் 4ந்தேதி முதல் இயங்கத் துவங்கும் இரண்டாவது அனல்மின் நிலையம் 20 புதிய அமைப்புகளையும் நவீன கருவிகளையும் கொண்டது.

என்.எல்.சி.க்கு சப்ளை செய்யப்படும் பொருட்களின் தரத்தை உயர்த்த வேண்டும்.

விற்பனைக்குப் பிறகு சர்வீஸ் செய்வதை சரியாக கடைபிடிக்க வேண்டும். விற்பனையாளர் முன்னேற்ற குழு ஒன்றும் உதிரி பாகங்கள் டிப்போ ஒன்றும் விரைவில் நிறுவப்படும்.

இவ்வாறு நாராயணன் கூறினார்.

# பூட்டோ மகள் பாகிஸ்தானுக்கு திரும்புகிறார்

லண்டன், மார்ச் 11— பூட்டோவின் மகள் பெனாசிர் பூட்டோ பாகிஸ்தானுக்கு திரும்புகிறார். பாகிஸ்தானில் மீண்டும் ஜனநாயகத்தை நிலைநிறுத்த மரணத்தையும் சந்திக்கத் தயார் என்றும் அவர் கூறியுள்ளார்.

இங்கிலாந்து நாட்டிலிருக்கும் பெனாசிர் பாகிஸ்தான் திரும்பி தீவிர அரசியலில் ஈடுபடுகிறார். வெளிநாட்டில் இருப்பதால் கட்சி நடவடிக்கைகளில் அவரால் தீவிரமாக ஈடுபட முடியாமல் இருந்தது.

எனவே மீண்டும் பாகிஸ்தான் சென்றுதீவிர அரசியலில் ஈடுபட பெனாசிர் திட்டமிட்டுள்ளார் இதற்காக அவர் விரைவில் பாகிஸ்தான் திரும்ப முடிவு செய்துள்ளார்.

இதுபற்றி லண்டனில் பெனாசிர் நிருபர்களிடம் கூறியதாவது:-

பாகிஸ்தானில் மீண்டும் ஜனநாயக ஆட்சியை மலரச் செய்ய வேண்டும் அதற்காக நான் விரைவில் பாகிஸ்தான் திரும்ப திட்டமிட்டுள்ளேன். அநேகமாக இந்த மாத கடைசியில் பாகிஸ்தான் செல்வேன். எந்தத் தேதியில் செல்வேன் என்று நிச்சயமாக சொல்லமுடியாது.

பாகிஸ்தானில் ஜனநாயகத்தை நிலைநாட்ட என் உயிரைக் கொடுக்கவும் தயாராக இருக்கிறேன்

இவ்வாறு பெனாசிர் கூறினார்.

பாகிஸ்தானுக்கு தான் திரும்பினால் ஆபத்து வரும் என்று தெரியும் அதைத் தெரிந்துகொண்டு தான் அங்கு செல்ல திட்டமிட்டுள்ளேன் என்றும் கூறினார்.

# நடத்தையில் சந்தேகம்: மனைவி கொலை, கணவனும் தற்கொலை

கோவில்பட்டி மார்ச் 11— மனைவியின் நடத்தையில் சந்தேகம் கொண்ட ஒருவர் மனைவியை கொலை செய்துவிட்டு தானும் தற்கொலை செய்து கொண்டார்.

இதுபற்றியவிபரமாவது:- கோவில்பட்டி அருகே உள்ள சங்கரலிங்காபுரம் இந்த ஊரைச்சேர்ந்தவர் சுப்பையா (வயது45) இவரது மனைவி பெயர் மாரியம்மாள் (வயது22)

சுப்பையா கேரளாவில் எஸ்டேட் ஒன்றில் வேலை பார்த்து வந்தாராம் மனைவி மாரியம்மாள் ஊரில் இருந்தாராம்.

மனைவியின் நடத்தையில் சுப்பையாவுக்கு சந்தேகம் ஏற்பட்டதாம்இதையடுத்து சுப்பையா தன் மனைவி மாரியம்மாளைஅரிவாளால் வெட்டிக் கொன்று விட்டு பம்புசெட் ஒன்றில் தானும் தற்கொலை செய்துகொண்டுள்ளார்.

இவர்களுக்கு கிருஷ்ணவேணி என்ற பெண்ணும் இருக்கிறாள்

இது தொடர்பாக போலீசார் விசாரித்து வருகின்றனர்.

# தஞ்சாவூர் மாவட்டத்தில் பரவலாக மழை

தஞ்சாவூர், மார்ச் 11- தஞ்சாவூா டெல்டாப் பகுதியில் நேற்று நல்ல மழை பெய்ததைத் தொடர்ந்து நிலக்கடலை மற்றும் பயறு வகை தானிய பயிர்களுக்கு பாதுகாப்பு ஏற்பட்டுள்ளது.

தஞ்சாவூர் மாவட்டம் டெல்டாப் பகுதி உள்பட தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் நேற்று நல்ல மழை பெய்தது.

பாண்டிச்சேரி மற்றும் அதன் சுற்றுப்புற பகுதிகளிலும் 11 சென்டி மீட்டர் மழை பெய்ததாக பதிவு ஆனது நேற்று பிற்பகலில் பெய்த பெரும் மழையினால் பாண்டிச்சேரியில் போக்குவரத்தும் சிறிது நேரம் தடைப்பட்டது சாலைகளில் வெள்ளம் ஓடியது.

சீர்காழியில் 16 மில்லி மீட்டர் மழையும், மணல்மேட்டில் 14 மில்லி மீட்டர் மழையும்பெய்துள்ளதாகப் பதிவு செய்துள்ளது.

தெற்ஆற்காடுமாவட்டம் கடலூர் உள்பட பல பகுதிகளில்நேற்றுகாலைமுதலே நல்ல மழைபெய்யதொடங்கியது. திண்டிவனம், விக்ரவாண்டி, நெல்லிக்குப்பம், சிதம்பரம் முதலிய பகுதிகளிலும் நல்ல மழை பெய்தது. கடலூரில் 48 மில்லி மீட்டர் மழை பெய்ததாக பதிவு செய்யப்பட்டுள்ளது

மாநில அளவிலான 5நாள் விளையாட்டுப் போட்டிகள் கடலூரில் நேற்று துவங்குவதாக இருந்தது ஆனால் பெரும் மழை காரணமாக நேற்றை துவக்கவிழா ரத்து செய்யப்பட்டது.

நேற்று தஞ்சாவூர் டெல்டாப் பகுதியில் பெய்த பெரும் மழையின் காரணமாக நிலக்கடலை, மற்றும் இதர பயிர்வகைகளுக்கு நல்லபாதுகாப்பு ஏற்படுள்ளது.இந்தமழைபயறுவகை பயிர்களுக்கு உதவி கரமாக அமைந்துள்ளது.

மதுரை பகுதியிலும் நேற்று நல்ல மழை பெய்தது. மதுரையில் நேற்று பூராவும் மந்தாரமானபருவ நிலை சூழ்ந்திருந்தது.

# கோடம்பாக்கம் குமார் நிகழ்ச்சிகள்

மார்ச்20ம்தே திராயபுரம்

21 ம் தேதி வில்லிவாக்கம்

22 ம் தேதி சேப்பாக்கம்

24 ம் தேதி திருவல்லிக்கேணி

25 ம் தேதி தி. நகர்

26 ம் தேதி அண்ணா நகர்

27 ம் தேதி ராதா கிருஷ்ண நகர்

28 ம் தேதி பெரம்பூர்

கூட்ட ஏற்பாடுகளை எம். ஜி. ஆர், மன்ற மாவட்ட செயலாளர் மதுசூதனன் எம். எல். சி. செய்துள்ளார்.

# தகராறு பிடித்த அயோத்தியில்புதிய ராமர் கோயில்

வாரணாசி, மார்ச் 11— இந்து முஸ்லிம் மோதல் ஏற்பட்ட அயோத்தியில் புதிதாக ரூபாய் 25கோடியில் ராமர்கோயில் கட்ட முடிவுசெய்யப்பட்டுள்ளது.

ராமபிரான் பிறந்ததாக இந்துக்களால் நம்பப்படும் அயோத்தியில் ராமர் கோயில் ஒன்று இருந்தது.

முஸ்லிம் பேரரசர் பாபர் ஆட்சி காலத்தில் அந்தக் கோயில் மசூதியாக மாற்றப்பட்டது.

அந்தக் கோயில் இந்துக்களுக்கா - முஸ்லிம்களுக்கா என்பதில் கடும் சண்டை ஏற்பட்டது. கோயில் மூடப்பட்டது.

35 ஆண்டுகளுக்குப்பிறகு அந்தக் கோயில் திறக்கப்பட்டது. அதன் பிறகு தகராறு தொடர்ந்தது.

இப்போது அயோத்தியில் ரூபாய் 25 கோடியில் ராமர்கோயில் கட்ட விஸ்வ இந்து பரிஷத் முடிவு செய்துள்ளது.

ஒவ்வொரு ஆண்டிலும் ''இந்துதினம்' கொண்டாட முடிவு எடுககப்பட்டிருப்பதாக விஸ்வ இந்து பரிஷத் கூட்டு செயலாளர் அசோக் சிங்கல் கூறினார்.

## பஸ் - லாரி பயங்கர மோதல்: 7 பேர் மரணம்

திருச்சி, மார்ச் 11— லாரியும் பஸ்சும் மோதிக் கொண்டதில் 7பேர் இறந்தனர்,

திருச்சி - சேலம் ரோட்டில் நொச்சியம் அருகில் திருவாச்சி என்ற இடத்தில் ஒரு பஸ்சும், ஒருலாரியும் பயங்கரமாக மோதிக்கொண்டன.

அந்த பஸ் தஞ்சையிலிருந்து சேலம் நோக்கிச் சென்று கொண்டிருந்த போது இவ்விபத்து நடந்தது.

இதில் 7 பேர் கொல்லப்பட்டனர்,

பஸ்சில் இருந்த 15பேர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

இறந்தவர்கள் அனைவரும் பஸ்சில்பயணம்செய்தவர்களாவர்.

# தமிழகத்தில் 38 ஆயிரம் பழங்குடியினருக்கு மலிவுவிலையில் கோதுமை-அரிசி

சென்னை, மார்ச் 11- தமிழகத்தில் சேலம், மற்றும் வடாற்காடு மாவட்டங்களில் மலைப்பகுதிகளில் 38ஆயிரம்பழங்குடியினருக்கு மலிவுவிலையில் கோதுமை அரிசி அளிக்க உத்தரவிடப்பட்டுள்ளது,

ஒருங்கிணைந்த பழங்குடியினர் மேம்பாடு திட்டப் பகுதியில் வாழும் மக்களுக்கு குறைநத விலையில் அரிசி, மற்றும் கோதுமை வழங்க தமிழக அரசு உத்தர விட்டுள்ளது.

மத்திய அரசு ஒருங்கிணைந்த பழங்குடியினர் மேம்பாடு திட்டம் அமலில் உள்ள பகுதிகளில் அரிசி ஒருகிலோரூபாய்1-85க்கும், கோதுமைஒருகிலோரூபாய் 1-50க்கும் வழங்கும்படி உத்திரவிட்டது.

## தமிழக அரசு உத்தரவு

ஆனால் தமிழக அரசு அத்திட்டத்தை பரிசீலித்து அரிசி ஒரு கிலோ ரூபாய் 1 40 க்கும் கோதுமை ஒரு கிலோ ரூபாய் 1.50க்கும் விற்கும்படி உத்தரவிட்டது,

ஒருங்கிணைந்த பழங்குடியினர் மேம்பாடு திட்டம் அமலில் உள்ள 9 பகுதிகளில் 38072 குடும்ப அட்டைதாரர்களுக்கு இது வழங்கப்படும் இத்திட்டம் சேலம் மாவட்டத்தில் ஏற்காடுமலை, கொல்லிமலை, கல்ராயன்மலை,அரனூத்து மலை. பச்சைமலை பகுதிகளிலும், வடாற்காடு மாவட்டத்தில் ஜவ்வாது மலையிலும்தென்னாற்காடு மாவட்டத்தில் கல்விராயன் மலையிலும்,தர்மபுரிமாவட்டத்தில்சித்தேரிமலையிலும் திருச்சி மாவட்டத்தில் பச்சை மலையிலும் செயல்படுத்தப்படும்.

இத்திட்டத்தின் மூலம் குடும்ப அட்டைக்கு அதிகபட்சம் மாதம் ஒன்றுக்கு 30 கிலோ கோதுமை வழங்கப்படும்

இவ்வாறு அரசு குறிப்பு ஒன்றில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## சத்ருகன் சின்கா அரசியலில் குதிப்பாரா?

புதுடெல்லி, மார்ச்11— இந்தியத்திரைப்பட வரலாற்றில் வில்லன் வேடத்தில் தோன்றி புகழேணியின் உச்சியில் சென்றவர்கள் ஒரு சிலர் தான். அந்த ஒரு சிலரில்குறிப்பிடத்தக்கவர் சத்ருகன் சின்கா.

சத்ருகன் சின்காவை தெரியாத 'டீன் ஏஜ் வாலிபர்களே இருக்க முடியாது. அந்த அளவுக்கு இளைஞர்கள் மத்தியில் குறிப்பாக இளம் பெண்கள் மத்தியில் புகழ் பெற்றவர் சத்ருகன் சின்கா.

தோரஹா படத்தில் இவர் ஏற்றிருந்த வில்லன் பாத்திரம் இந்திப்படவுலகில் பல புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. இவரைப் பின்பற்றி பல புதிய வில்லன்கள் தோன்றினார்கள் என்றால் மிகையாகாது

படங்களில்தான் வில்லனாக தோன்றினார். அரசியலிலாவது ஆளும் கட்சியினருடன் நெருக்கமாக இருக்கலாம் என்றால் அதுவும் இல்லை. அரசியலில் இவர்ஈடுபடா விட்டாலும் பாரதீய ஜனதா கட்சி தலைவர்களிடம் இவருக்கு நெருங்கிய தொடர்பு இருந்ததோடு அவர்கள் மீது ரொம்ப பக்தியும் கொண்டிருந்தார். ஒரு புகழ் பெற்ற நடிகர் எதிர்க்கட்சிகளுடன் தொடர்பு கொண்டிருக்கிறார் என்றால் அது ஆளுங்கட்சியினருக்கு தெரியாமல் இருக்க சந்தர்ப்பமில்லை.

எனினும் எந்த விதத்திலும் சத்ருகன் சின்காவுக்கு தொல்லைதரப் படவில்லை படிப்படியாக ஹீரோவாக உயர்ந்த சத்ருகன் சின்கா ஆளும்காங்கிரஸ் கட்சியினருடன் தொடர்பு கொள்ளவில்லை என்றாலும் அன்னை இந்திராவின் மீது அளவற்ற பக்தியும் பாசமும் கொண்டிருந்தார். இந்தப் பாசத்தினால் தான் இந்திராவின் இறுதி ஊர்வலத்தில் ஓடோடி வந்து கலந்துகொண்டதாக சத்ருகன் தெரிவித்துள்ளார்.

பீகார் மாநிலவாசியான இவர்தான் பிறந்தமாநிலத்துக்கு தன்னால் முடிந்த ஏதாவது செய்ய வேண்டுமென்று எண்ணினார் அந்த உணர்வின் உந்துதலால் தனது தந்தை பெயரில் ஏழை மக்களுக்கு இலவச மருத்துவ உதவி வழங்க மருத்துவமனை ஒன்றை அமைக்கத் திட்டமிட்டார்.

இதற்காக சத்ருகன் சின்கா நட்சத்திர இரவு நடத்தி அதன் மூலம் பணம் திரட்டி பெரிய அளவில் மருத்துவ மனையை உருவாக்கத் திட்டமிட்டார்.

இதற்காக இந்திப்படவுலகில் புகழ் பெற்ற நட்சத்திரங்களை யெல்லாம் அழைத்திருந்தார். அவர்களும் வர ஏற்பாடாகியது.

நட்சத்திர இரவு நடத்த மாநில அரசின் அனுமதி தேவை இதற்காக பீகார் மாநில முதல்வர் பிந்தேஸ்வர்துபேயையும் சந்தித்தார். முதலில் இதற்கு அனுமதி தந்ததாக சொல்லப்படுகிறது. ஆனால் என்ன காரணத்தினாலோ சத்ருகன்சின்கா நட்சத்திர இரவு நடத்த மாநில அரசு அனுமதி தர மறுத்தது

பீகார் மாநில காங்கிரஸ் தலைவர்கள் பலரின் சூழ்ச்சியால் தான் தனக்கு அனுமதி மறுக்கப்பட்டது என்று சத்ருகன் சின்கா வெளிப்படையாக கூறினார், இதில் உண்மை எந்த அளவு இருக்கிறது என்பது ஒரு புறமிருந்தாலும் சத்ருகன் சின்கா இதற்காக சோர்ந்து விடவில்லை.பீகார் முதல்வருக்கும், பிரதமருக்கும் இது குறித்து கடிதம் எழுதினார்.

பிரதமரின் அலுவலகத்திலிருந்து சத்ருகன் சின்கா கடிதத்தை பெற்றதற்கான அத்தாட்சி ரசீது மட்டுமே வந்ததாம். ஆனால் பதில் ஏதும் வரவில்லையாம்

இப்படிப்பட்ட இடையூறுகளால் பாதிக்கப்பட்ட சத்ருகன் தானும் ஏன் அரசியலில் புகக்கூடாது என்று எண்ணினார். இப போது அதற்கான தீவிர முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் என்று தெரிகிறது அரசியலில் சேருவது பற்றி சத்ருகன் சின்கா மறுத்துள்ள போதிலும் பீகார் மக்களுக்காக தான் எதையாவது செய்ய விரும்புவதாகவும் அதற்கான வழியில் ஈடுபடப்போவதாகவும் கூறியிருப்பது அவர் அரசியலில் ஈடுபடுவாரோ என்ற எண்ணத்தை ஏற்படுத்தியுள்ளது.

### தலைவர்களுடன் ஆலோசனை

தீவிர அரசியலில் ஈடுபட போவதில்லை என்று ஒரு புறம் கூறி வந்தாலும் அரசியல் தலைவர்களை சந்தித்து ஆலோசனைக் கேட்பது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிறார்.

சத்ருகன்சின்காவின் மற்றொரு நெருங்கிய நண்பர் யார் தெரியுமா? ஜியாவுல் ஹக் சத்ருகன் சின்கா பாகிஸ்தான்சென்ற போது இவருக்கு அரசாங்க மரியாதை தரப்பட்டது.

தேர்தல்களில் தான் ஏன் நிற்கவில்லை என்பதற்கும் சத்ருகன் விளக்கம் தந்துள்ளார் ஒரு தேர்தலில் வெற்றிபெறுவது என்பது பயனற்றது

ஒரே எண்ணம் கொண்ட மக்களை ஒன்று சேர்க்க வேண்டும் என்பதுதான் எனது எண்ணம். அதற்கான முயற்சியில் ஈடுபடுவேன் என்றும் கூறியுள்ளார். சத்ருகன் ஒருவேளை தனிக்கட்சி தொடங்குவாரா என்ற அய்யத்தை இது எழுப்பியுள்ளது.

எப்படியாயினும் சத்ருகன் சின்கா விரைவில் அரசியலில் குதிப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஏதாவது ஒரு கட்சியில் சேருவாரா அல்லது இவரோ தனிக் கட்சி தொடங்குவாரா என்பது பொறுத்திருந்து பார்த்தால் தான் தெரியும்.

## பெண் கொலை: குவெய்த் இந்தியருக்கு தூக்கு

குவெய்த்- மார்ச் 11 குவெய்த்தில் ஒரு பெண்ணை கொலை செய்து அவரிடமிருந்த நகை மற்றும்ரொக்கத்தை கொள்ளை அடித்ததற்காக இந்தியர் ஒருவருக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட நபரின் பெயர் ரஞ்சா கோபால் என்று குவெய்த் அரசு அறிவித்தது. வேறு விவரங்கள் அறிவிக்கப்பட வில்லை.

## மருது சகோதரர் ஆண்ட இடம் சுற்றுலா தலமாகும்

மதுரை, மார்ச் 11— சுதந்திரத் திற்காகப் போரிட்ட மருது சகோதரர்கள் ஆண்ட காளையார் கோயில் சுற்றுலா தலமாகிறது இதற்கான திட்டம்அரசுக்கு அனுப்பப்படும் என்றுபசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்ட ஆடசித்தலைவர் நரேஷ்குப்தா கூறினார்.

பிரான்மலையைசுற்றுலா தலமாக ஆக்க திட்டமிடப்பட்டிருப்பதாகவும் அவர் கூறினார்.

## பழனியாண்டி டெல்லி பயணம்

சென்னை, மார்ச் 11— தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் எம். பழனியாண்டி டெல்லி சென்றுள்ளார்.

காங்கிரஸ் மேலிடத்தின். அழைப்பின் பேரில் அவர் டெல்லி சென்றிருக்கிறார்

## பறவை தாக்கி விமானம்சேதம்

பம்பாய், மார்ச் 11— இந்தியன் ஏர்லைன்ஸ் போயிங் விமானம் ஒன்று பறவையின் தாக்குதலுக்கு உள்ளாகி விபத்துக்குள்ளானது.

கொச்சியில் இருந்து வந்த இந்த விமானம் பம்பாய் வந்தபோது பறவை தாக்கியது.

விபத்துக்குள்ளான விமானத்தில் எஞ்சின் மாற்றப்படுகிறது.

இதனால் பம்பாய் அகமதாபாத் செல்லும் விமானம் 3 மணி நேரம் தாமதப்பட்டது.

அருப்புக்கோட்டை ஊராட்சி ஒன்றியப் பெருந் தலைவராக சுப்பாராஜ் பதவி ஏற்றபோது எடுத்த படம்.

## கூலிப் படையினரைக் கொண்டு ஈழத் தமிழர் மீது குண்டு வீச்சு

கொழும்பு, மார்ச் 11- இங்கிலாந்து மற்றும்இஸ்ரேல் கூலிப்படையினரைக் கொண்டு ஈழத்தமிழர்கள் மீது இலங்கை அரசு குண்டுவீசித் தாக்கி வருவது அம்பலமாகியுள்ளது.

தமிழர் பகுதிகளில்குண்டுகளை வீசி தாக்குதல் நடத்தும் ஹெலி காப்டர் விமானங்களை வெளி நாடுகளைச் சேர்ந்த விமானிகள் மற்றும் ராணுவத்தினர் இயக்கி வருகிறார்கள்.

இலங்கை தமிழர் பிரச்சினையில் வெளிநாடுகளைச் சேர்ந்த சிலர் ஈடுபட்டுள்ளார்கள். வெளிநாடுகளில்இருந்து ராணுவ தளவாடங்களை இலங்கை வாங்கிக் குவித்து வரும் போக்கையும் இந்தியா கண்டனம் செய்துள்ளது.

சிங்கள ராணுவத்தினரின் போர் ஆயுதங்களையும் ஹெலிகாப்டர் விமானங்களையும் பிரிட்டன் இஸ்ரேல் ஆகிய நாடுகளைச் சேர்ந்த கூலிப் படையினர் இயக்குகிறார்கள்.

சிங்கள ராணுவத்தினருடன் சேர்ந்துகொண்டு பிரிட்டிஷ் கூலிப்படையும் இஸ்ரேல் போர் வீரர்களும் தமிழர்கள் மீது தாக்குதலை நடத்துகிறார்கள். இதுவரை ஆயிரத்து 500 அப்பாவித் தமிழர்கள் கொல்லப்பட்டுள்ளனர்.

நூற்றுக்கும் மேற்பட்ட கிராமங்கள் சூறையாடப்பட்டு தீயிட்டு கொளுத்தப்பட்டன. பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் தங்க இடம் இன்றி வேறு இடங்களுக்கு புகலிடம் தேடி ஓடுகிறார்கள்.

கடந்த சில மாதங்களில் தனது ராணுவத்தை இலங்கை அரசு பெருமளவிற்கு விஸ்தரிப்புச் செய்துள்ளது தரைப்படை, விமானப்படைகப்பற்படை ஆகியவற்றை அது விஸ்தரித்தது. 5 ஆயிரம் பேர் இருந்த படையினரை மும்மடங்காக அது அதிகரித்துள்ளது.

இந்த விவரங்களை எடுத்துக்கூறி இந்தியஅரசுஜெயவர்த்தனேயை எச்சரிக்கை செய்துள்ளது.

சமரச பேச்சு வார்த்தைக்கு இலங்கை அரசு உடனடியாக முன் வர வேண்டும்என்றும்இந்தியா கடும் எச்சரிக்கை செய்துள்ளது.

## யானைகள் ஓட்டம்: மக்கள் பீதி

திருச்சூர், மார்ச் 11— திருச்சூர் கோவிலில் விழா நடைபெற்றது.

இதையொட்டி 7 யானைகள் அலங்கரிக்கப்பட்டு அழைத்து வரப்பட்டன.

அப்போது திடீரென ஒரு யானை ஓடத் துவங்கியது. அதைபார்த்த மற்றயானைகளும் ஓட ஆரம்பித்தன. இதனால் குழப்பம் ஏற்பட்டது.

அங்கு கூடியிருந்த 2ஆயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் உடனே பீதியடைந்து ஓடினர்.

மாவுத்தர் ஒருவர் துணிச்சலுடன் யானைகளைக்கட்டுப் படுத்தினார் அவருக்கு 101 ரூபாய் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

## தாய்வான் ஓட்டல்களில் புலிக்கறி சாப்பாடு

தாய்வான்,மார்ச் 10— கோழிக்கறி, ஆட்டுக்கறி என்று வகை வகையாக தயாரித்து சிலர் சாப்பிடுகிறார்கள் அல்லவா? அதைப்போல புலிகளையும் அடித்து சமைத்துச்சாப்பிடுகிறார்கள். இந்தப் புலிக்கறி சாப்பிடும் பழக்கம் தாய்வான் நாட்டில இருக்கிறது.

இந்தியாவிலிருந்து புலிக்குட்டிகளை சிலர் கடத்திச்சென்று தாய்வானில் விற்று விடுகிறார்கள்.

அதை வாங்கிக் கொள்ளும் ஓட்டல்காரர்கள் அதைக கொன்று உணவு சமைக்கிறார்கள். ஒரு புலி ஒரு லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் விலைக்குப் போகிறது.

இந்த படுபாதகச் செயலுக்கு தாய்வான் நாடு தடை விதித்தாலும் ரகசியமாக புலிக்கறி உணவு சப்ளை செய்யப்படுகிறது. பெரும்பாலும் சீனாகள் நடத்தும் ஓட்டல்களில் இந்தக் கறி உணவு சப்ளை செய்யப்படுகிறது

கசாப்புக் கடைக்காரர் ஒருவர் ஒரு புலியைக் கொல்லவிருந்தபோது கருணை மனம் படைத்த ஒரு வியாபாரி அதை தக்க தருணத்தில் காப்பாற்றினார்.

அதற்கு அவர் கொடுத்த பணம் ஒரு லட்சத்து 30 ஆயிரம் ரூபாய். அந்த கருணை மகானின் பெயர் சூநான்செங்க் வாங்கிய புலியை அந்த பெரிய மனிதர் உடனடியாகதாய்வானிலுள்ள வனவிலங்கு காட்சிசாலைக்கு கொடுத்து விட்டார்.

மனித மிருகத்தின் வயிற்றுப் பசியில் இருந்து காப்பாற்றப்பட்ட அந்தப் புலி இப்போது வனவிலங்குகண்காட்சியில் துள்ளி விளையாடிக் கொண்டிருக்கிறது.

இந்தச் சம்பவத்தைத் தொடர்ந்துஅவரைச் சந்தித்த பத்திரிகையாளர்களிடம் சூநான்செங்க் புலிகளைக் கொன்று தின்னுவது காட்டுமிராண்டித்தனம் இதை அறவே ஒழிக்க வேண்டும் என்று கூறினார்.

கடந்த 3 ஆண்டுகளில் இதுவரை 21 புலிகள் உணவுக்காக கொல்லப்பட்டுள்ளன என்று தாய்வான் நாட்டு உள்துறை அமைச்சகம் கூறியது.

ஆனால் தாய்வான் அரசு புலிகளை இறக்குமதிசெய்யவில்லை. சில கடத்தல்காரர்கள் தான் எப்படியோஇந்தியா வங்காளதேசம் ஆகிய நாடுகளில் இருந்து இங்கே கொண்டுவந்து விடுகிறார்கள் என்று ஒரு அமைச்சக அதிகாரி கூறினார்.

## உயர்நீதி மன்ற பெஞ்ச் மதுரையில் அமைய சுயநலமிகள் தடையா?

### மாநிலங்களவையில் காதர்ஷா கேள்வி

புதுடெல்லி, மார்ச் 11- மதுரையில் உயர்நீதி மன்ற பெஞ்ச் அமைவதற்கு சுயநலமிகள் தடையாக இருப்பதா என்று மாநிலங்களவையில்கழக உறுப்பினர் காதர்ஷா கண்டனம் தெரிவித்தார்.

மாநிலங்களவையில் கவனஈர்ப்புத்தீர்மானத்தில் கலந்து கொண்டு கழக உறுப்பினர் காதர்ஷாபேசியதாவது:-

உயர்நீதி மன்றங்களின் பெஞ்ச் அமைப்பது பற்றி ஆராய்வதற்காக அரசால் நியமிக்கப்பட்ட ஜஸ்வந்த் சிங் கமிஷன் அறிக்கை கொடுத்து நீண்ட நாளாகிறது. ஓராண்டுகாலத்திற்கு முன் கொடுக்கப்பட்ட அது இன்னும் அரசின் பரிசீலனையில் இருக்கிறது. என்று அமைச்சர் கூறுவது முறையல்ல. தாமதம் செய்தால்கமிஷன்அமைத்ததற்கே அர்த்தம் இல்லாமல் போய் விடும்.

அரசாங்கத்தின் முடிவு எப்போது அறிவிக்கப்படும் என்பதை அமைச்சர் இங்கு திட்டவட்டமாகக் கூற வேண்டும்.

உயர் நீதி மன்றத்தின் பெஞ்ச் அமைய வேண்டும் என்று மேற்குஉ.பி. மட்டும் கேட்கவில்லை. வேறு பல மாநிலங்களும் கேட்கின்றன.

என்னுடைய மாநிலமான தமிழ்நாடும் கேட்கிறது. சென்னை உயர்நீதி மன்ற பெஞ்சைமதுரையில் அமைக்கவேண்டும் என்று தமிழக அரசு ஏற்கனவே கோரிக்கை விடுத்துள்ளது. சட்டமன்றத் தீர்மானம் கூட நிறைவேற்றப்பட்டுள்ளது. ஆனால் உயர்நீதி மன்றங்களிலுள்ள சில சுயநல சக்திகள் பெஞ்ச் அமைவதற்கு தடையாக உள்ளன.

பெஞ்ச் நிறுவினால்உயர் நீதி மன்றத்தின் சுமுகமான வேலையும் நீதியின் தரமும் பாதிக்கப்படும் என்றுசட்ட அமைச்சர் தன் பதிலில்கூறியிருப்பது ஏற்கெனவே அமைந்துள்ளபெஞ்சுகளின் மீது தொடுக்கப்படுகிற மறைமுகமான தாக்குதலாகும்.

பம்பாய் உயர்நீதி மன்றத்தின் பெஞ்ச் நாகபுரியிலும், அவுரங்கபாத்திலும் நடைபெறுகிறது. ராஜஸ்தான் உயர்நீதி மன்றத்தின் பெஞ்ச் ஜெய்ப்பூரிலும்' ஜோத்பூரிலும் இயங்கி வருகிறது. அகாலபாத் உயர்நீதி மன்றத்தின் பெஞ்ச் லக்னோவில் உள்ளது.

கவுகாத்திஉயர்நீதிமன்றம் கவுகாத்தியில் மட்டும் உட்காருவதில்லை. பல வடகிழக்கு மாநிலங்களின்தலைநகரங்களிளெல்லாம் உட்கார்ந்து விசாரணை நடத்துகிறது. இந்த உயர் நீதி மன்றங்களிலெல்லாம் தரம் தாழ்ந்துவிட்டது என்று அமைச்சர் குறை கூறுகிறாரா?

உயர்நீதி மன்றங்களில் ஆயிரக்கணக்கான வழக்குகள் தேங்கிக் கிடக்கின்றன. மக்கள் நீதிமன்றங்களை நோக்கிநூற்றுக்கணக்கான மைல்கள் பயணம் செய்ய வேண்டியிருக்கிறது. நீதி மன்றங்கள் நீதி வழங்கினால் மட்டும் போதாது அது சிக்கனமாகவும்இருக்க வேண்டும்; சீக்கிரமாகவும் கிடைக்க வேண்டும்.

ஆகவே எந்த மாநிலம் விரும்பினாலும் அந்த மாநிலத்தில் பெஞ்ச் அமைப்பதற்கு மத்திய அரசு முன்வரவேண்டும். பெஞ்ச் அமைப்பதா வேண்டாமா என்பது உயர்நீதிமன்றத்தின் உரிமையாக இருக்கக் கூடாது. சட்டமன்றத்தின் முடிவே இறுதியானதாக இருக்க வேண்டும்.

இவ்வாறு மு. காதர்ஷா கூறினார்

## தமிழ்நாட்டில் வரதட்சணை கொடுமைபற்றி 18 பெண்கள்புகார்

சென்னை, மார்ச் 11— வரதட்சணை கொடுமை பற்றிகடந்த 2 மாதங்களில் 18 பெண்கள் புகார் செய்துள்ளனர்.

தமிழ்நாடு உள்துறை செயலாளர் டி.வி.வெங்கட்ராமன் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:-

வரதட்சணைக் கொடுமைக்கு எதிராக மக்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளது. இதைத்தொடர்ந்து வரதட்சணை கொடுமைகள் பற்றி புகார்கள் வருகின்றன.

கடந்த 2 மாதத்தில் 18 பெண்கள் வரதட்சணை கொடுமை பற்றி புகார் செய்துள்ளனர்.

கடந்த சில மாதங்களுக்குள் 100 புகார்கள் வந்தன. இவற்றில் 50 புகார்கள் விஷயத்தில் அவை சுமுகமாகத் தீர்த்து வைக்கப்பட்டன.

### நேரடிக் கவனம்

போலீஸ் துணை கமிஷனர் நேரடியாக இப்பிரச்சினையைக் கவனிக்கிறார்.

இவ்வாறு வெங்கட்ராமன் கூறினார்.

## மியூசியத்தில் புதிய போலீஸ் நிலையம்

சென்னை, மார்ச் 11— சென்னை எழும்பூரிலுள்ள மியூசியத்தில் புதிதாக ஒரு காவல் நிலையம் திறந்து வைக்கப்பட்டது எப்—6 என்ற இந்த காவல் நிலையத்தில் ஒரு சப்-இன்ஸ்பெக்டர் 2 தலைமை காவலர்கள் 5 காவலர்கள் பணியாற்றுவார்கள்.

புதியகாவல நிலையத்தை தக் கமிஷனர் தேவாரம் திறந்து வைத்தார். துணை கமிஷனர் வடிவேலு. உதவி கமிஷனர் குப்புசாமி, எத்திராஜ், எழும்பூர் இன்ஸ்பெக்டர் வேணுகோபால் ஆகியோர் கலந்துகொண்டனர்

## மேற்கு வங்கத்தில் உள்ளாட்சி தேர்தல் ஒத்திவைப்பு

கல்கத்தா, மார்ச் 11— மேற்கு வங்கத்தில் 75 நகராட்சிகளுக்கு, ஜூன் மாதம் முதல் தேதி தேர்தல்-நடை பெறுவதாக இருந்தது. அப்போது ரம்ஜான் வருவதால தேர்தலை ஒத்தி வைக்குமாறு அரசியல் கட்சிகள் மதஸ்தாபனங்கள் உள்ளிட்ட அமைப்புகள் கோரின. இதை அடுத்து நகராட்சி தேர்தல்கள் ஜூன் 15ந் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளதாக சட்ட சபையில் உள்ளாட்சித்துறை அமைச்சர் பிரசாந்தசூர்தெரிவித்தார்,

## பண்டாரிக்கு ஜெயவர்த்தனே அழைப்பு

கொழும்பு, மார்ச் 11 இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே இலங்கை தமிழர் பிரச்சினை பற்றி மேலும் விவாதிக்க ரமேஷ் பண்டாரியை விரைவில் அழைப்பார் எனத் தெரிகிறது.

இந்தியத்தூதர் ஜே. என். தீட்சித் அதிபர் ஜெயவர்த்தனேயை சந்தித்து பேச்சு நடத்தியுள்ளார். இதன் விளைவாக பண்டாரியை ஜெயவர்த்தனே விரைவில் அழைப்பார் எனத் தெரிகிறது.

## டாக்டர் மனைவியை கொலை செய்த வாலிபருக்கு தூக்கு

சென்னை, மார்ச் 11- டாக்டர் மனைவியைக் கொலை செய்த வாலிபருக்கு தூக்கு தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

கல்பாக்கத்தைச் சேர்ந்த டாக்டர் மாணிக்கசாமிஎன்பவரின் மனைவி ஜெயசாம்பாள் (வயது 35) இவருக்கும் கல்பாக்கம் மருத்துவ மனையில் தொழு நோய் ஆய்வாளராக பணியாற்றும் மூர்த்திக்கும் கள்ளக் காதல் ஏற்பட்டதாம்.

இந்தக் கள்ளக்காதல் பற்றி ஜெயசாம்பாளின் மகள் கவிதா பிரியதர்சினி அறியவேமூர்த்தியைதனது வீட்டிற்கு வரவேண்டாமென்று ஜெயசாம்பாள் கூறினாராம்,

இதனால் ஆத்திரமடைந்த மூர்த்தி ஒரு நாள் இரவு ஜெயசாம்பாளின் வீட்டுக்குள்புகுந்து அவரை கத்தியால் குத்தி கொலை செய்ததோடு அவரதுமகன் விஜய ஆனந்தையும் கொலை செய்தாராம்.

இந்த சம்பவத்தை கண்டு டாக்டர் மாணிக்கசாமி கூச்சல் போடவே பக்கத்து வீட்டிலிருந்த இன்ஸ்பெக் தீனதயாளன் ஓடிவந்து மூர்த்தியை கைது செய்தார்இதுதொடர்பாக செங்கல்பட்டு செசன்சு கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது வழக்கை விசாரித்த நீதிபதி கிருஷ்ணசாமி மூர்த்திக்கு தூக்கு தண்டனை விதித்து தீர்ப்பு கூறினார்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் தீனதயாளனையும் நீதிபதி பாராட்டினார்.



# அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக சார்பில்

## உள்ளாட்சித்தேர்தலில் வாக்களித்த வாக்காளப் பெருமக்களுக்கு நன்றிஅறிவிப்பும், வெற்றிபெற்ற நகராட்சி, ஒன்றிய-பேரூராட்சி தலைவர்களுக்குப்

# பாராட்டு விழாவும்

இடம்:- திருநெல்வேலிநகர-சாப்டர் மேல்நிலைப்பள்ளி

நாள்:- 14-3-86 வெள்ளி மாலை 6-மணி

**தலைமை : திருமிகு. எஸ். இராகவானந்தம் அவர்கள்** கழகப் பொதுச் செயலாளர்

**முன்னிலை : மாண்புமிகு. டாக்டர். நாவலர் அவர்கள்** நிதிஅமைச்சர்

வரவேற்புரை: திருமிகு. வி. கருப்பசாமிபாண்டியன் அவர்கள் நெல்லை மாவட்டச் செயலாளர்

# மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சிதலைவர்

# எம். ஜி. ஆர். அவர்கள்



வெற்றி பெற்றவர்களுக்கு பொன்னாடை போர்த்தி பாராட்டுரை வழங்குவர்

பங்குபெறுவோர்: அவைத்தலைவர், தலைமைக்கழக செயலாளர்கள், மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள், நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், மாவட்டக் கழக செயலாளர்கள், வாரியத் தலைவர்கள், முன்னணித் தலைவர்கள்.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்.